[20th August 1960

மெட்டல் ரோடு போட்டு, ப்ளாக்டாப் போடுவதற்கு வசதியாக இருக்கும் என்று தெரிவிக்கப்பட்டது. இதுபற்றி மத்திய அரசாங்கத்திற்கு எழுதியிருக்கிறோம். இப்போதுள்ள நிலைமையில் வேலையை எடுத்துக்கொண்டு பிறகு வேண்டுமானாலும் அங்கீகாரம் பெறலாம் என்று இருக்கிறது.

**SRI A. VEDARATHNAM:** நான்கு லட்சத்திற்கு போடப்பட்ட திட்டமானது இப்பொழுது ஏழு லட்சமாக உயர்ந்தது. திட்டம் போட்ட காலத்திலே அதை எடுத்துக்கொண்டு அதிக காலதாமதம் செய்யாமல் அப்போதே அந்த வேலையைப் பூர்த்தி செய்திருந்தால் இத்தகைய கஷ்டம் நேர்ந்திராது அல்லவா?

**THE HON. SRI P. KAKKAN:** நான்கு லட்சம் ரூபாயில் திட்டத்தை ஆரம்பித்திருந்தால் வேலையே நடந்திருக்காது. எப்படியும் ரோடு போடுவதுதான் போடுகிறோம், நல்லமுறையில் போடவேண்டும் என்பதற்காகவே காலதாமதம் செய்யப்பட்டது.

*Jeeps for Assistant Engineers*

* 329 *Q.*—SRI S. M. ANNAMALAI (on behalf of SRI K. R. VISWANATHAN): Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) whether there was any proposal for supply of jeeps to each of the Assistant Engineers (Public Health) employed under the Rural Water-supply Comprehensive Programme and the Local Development Works Programme; and

(*b*) if so, why it was not given effect to?

THE HON. SRI M. A. MANICKAVELU: (*a*) Yes, Sir.

(*b*) The proposal was deferred for want of funds.

**SRI S. M. ANNAMALAI:** இப்படிக் கிணறுகள் வெட்ட டெக்னிகல் அசிஸ்டெண்டு வேண்டுமென்று கோரினால் அவர்கள் வந்து பார்ப்பதற்கே காலதாமதமாகிறது. அவர்களுக்கு ஜீப் இருந்தால் வேலை துரிதமாக நடைபெறும். அந்தக் காரணத்தை யொட்டியாவது அப்படிப்பட்டவர்களுக்கு ஜீப் வழங்க முன் வருவார்களா?

**THE HON. SRI M. A. MANICKAVELU:** எல்லோரும் ஜீப் வேண்டும் என்கிறார்கள். முக்கியமானவற்றிற்கு எல்லாம் கொடுத்து வருகிறோம். காலக்கிரமத்தில் இவர்களுக்கும் கொடுக்க ஏற்பாடு செய்கிறோம்.

*Foul smell from tanneries*

*** 330 *Q.*—SRI S. M. ANNAMALAI:** கனம் ரெவின்யு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

வடஆற்காடு மாவட்டம் வாணியம்பாடிக்கு அருகாமையிலுள்ள வளையாம்பட்டு, கிரிசமுத்திரம் கிராமங்களுக்கருகில் தோல் கழுவுநீரில் துர்நாற்றத்தால் சுகாதாரம் பாதிக்கப்படுவதைத் தடுக்க அரசாங்கத்தார் எடுத்துக்கொண்ட நடவடிக்கைகள் யாவை?